[8th September 1958

SRI K. B. S. MANI : இப்பொழுது அதிகமாக சுயமரியாதைத் திருமணங்களும், புரோகிதர் இல்லாத திருமணங்களுந்தான் நடைபெற்றுக் கொண்டு வருகின்றன. பேப்பர்களில் பார்த்தால் அதில் வருகிற பல திருமணங்களும் புரோகிதர் வைத்துச் செய்யாததினால் அத்திருமணங்கள் செல்லுபடியாகாது என்றும் அப்படி அவர்களுக்கு குழைந்தைகள் பிறந்தால் கூட, அப்பெண்கள் அவர்களது மனைவிகள் அல்ல என்று ஜட்ஜ்களால் தீர்ப்பளிக்கப்படுகிறது. ஆகவே கட்டாயமாக ரெஜிஸ்டர் செய்து கொள்ள வேண்டுமென்று இருந்தால் கூட ஆயிரக்கணக்கான மக்கள் ரெஜிஸ்டர் செய்து கொள்ளாமல் இருக்கின்றனர். ஆகவே, தாலி கட்டினால் அவள் உண்மையிலே மனைவி என்ற திருத்தத்தை சர்க்கார் அமுலுக்குக் கொண்டு வருமா ?

THE HON SRI M. BHAKTAVATSALAM : இம்மாதிரி திருமணங்களை ரெஜிஸ்டர் செய்து கொள்வதில் கஷ்டம் ஒன்றும் இல்லை. அங்கத்தினர் அவர்களே சமீபத்தில் திருமணம் செய்துகொண்டார்கள். அவர்கள் ரெஜிஸ்டர் செய்து கொண்டாரா இல்லையா என்று தெரியாது. அவர்களைப் போன்றவர்கள் மற்றவர்களுக்குச் சொல்லி இம்மாதிரி திருமணங்களை ரெஜிஸ்டர் செய்து வைப்பதுதான் நல்லது.

### *Sandalwood oil*

* 95 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) எந்தெந்த ஜில்லாக்களிலே கவர்ன்மெண்டு நிலத்திலும், தனிப் பட்டவர்களுடைய நிலங்களிலும் சந்தன மரங்கள் இருக்கின்றன ?

(ஆ) எத்தனை ரூபாய் மதிப்புள்ள சந்தனக் கட்டை 1957, 1958-ம் வருஷங்களிலே விற்பனை செய்யப்பட்டது ?

(இ) சந்தனக் கட்டையிலிருந்து எண்ணெய் உற்பத்திச் செய்யும் தொழிற்சாலைகள் எந்தெந்த இடங்களிலே யார் யாரால் நடத்தப்பட்டு வருகின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) North Arcot, South Arcot, Salem, Coimbatore, Madurai, Nilgiris, Tirunelveli and Ramanathapuram districts.

| (*b*) *Year.* | *Revenue realised.* |
|---|---|
| (i) 1957 | Rs. 45,32,935·00 |
| (ii) 1958 | Rs. 7,18,002·00 |

(Up to January 1958.)

(realised at the auction sale of sandalwood in January 1958 at Satyamangalam sale depot).

(*c*) Factories for extraction of sandalwood are at Salem, Mettur Dam and Tirupattur. They are run by private individuals.

* 96 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Home be pleased to state whether any final decision has been taken to start a sandalwood oil distillery in the public sector and, if so, what the details are?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is a proposal under consideration to work a pilot scheme and no decision has been taken yet on it.

SRI P. G. MANICKAM : தயாரிக்கப்படும் சந்தன எண்ணெ மற்ற தேசங்களுக்கு விற்பனை செய்ய அனுப்பப்படுகிறதா ? அல்லது அதை வைத்துக்கொண்டு இங்கேயே மற்ற இதரப் பொருள்கள் உற்பத்தி செய்யப் படுகிறதா ?

8th September 1958]

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : சந்தன எண்ணெய்க்கு பெரும்பாலும் அந்நிய நாடுகளில்தான் டிமாண்டு.

**SRI M. KALYANASUNDARAM** : சந்தன எண்ணெ உற்பத்தி செய்யும் தொழிற்சாலையை சர்க்கார் ஆரம்பிப்பதற்கு இப்பொழுது தனியார்கள் ஆட்சேபணை தெரிவித்திருக்கிறார்களா ? அப்படியானால் அவர்களது ஆட்சேபம் என்ன ? அதைக் கணக்கில் எடுத்துக்கொண்டு சர்க்கார் இதை கைவிட்டுவிடுவார்களா ? அல்லது சர்க்காரே அதை நடத்துவார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : இப்பொழுது தனிப்பட்டவர்கள், வியாபாரத்தில் இருக்கிறவர்கள் ஆட்சேபணை தெரிவிக்கிறார்கள். அப்படித் தெரிவிப்பது இயற்கையே. ஆனால் இந்த யோசனையை, மைசூர் அரசாங்கம் அதன் ராஜ்யத்திலுள்ள சந்தன மரங்களிலிருந்து எண்ணெ இறக்குகிறார்கள். அப்படி இறக்கி அதை அமெரிக்காபோன்ற நாடுகளுக்கு விற்கிறார்கள். ஆனால் முன்பிருந்த அமைச்சர் ஒருவர் என்னிடம் ஒரு யோசனை சொன்னார். இதுபற்றி பரிசீலனை செய்வது இன்னொருவர் ஆட்சேபிக்கிறார்கள் என்பதற்காகவல்ல. நாம் இவைகளை விற்பதை விட எண்ணெ இறக்குவதில் சர்க்காருக்கு லாபம் உண்டா என்பதை நிச்சயப் படுத்திக்கொண்டுதான் இதில் இறங்கவேண்டும். அதுதான் பரிசீலனை செய்யப்பட்டுவருகிறது. அதற்கு பிறகு ஒரு பைலட் ஸ்கீமாகச் செய்யலாமா என்பது பற்றி இப்பொழுது பரிசீலனை செய்யப்படுகிறது.

*Horses*

* 100-AA Q.—**SRI A. VEDARATNAM** : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லாவிலுள்ள கொடிக்காட்டில் உள்ள நல்ல ரகக் குதிரைகளை அபிவிருத்தி செய்ய அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறது?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : A scheme on an experimental basis was proposed by the Animal Husbandry Department in 1950 for the development of horses in the Kodikadu area of Tanjore district but it was not pursued by the Government on grounds of economy.

**SRI A. VEDARATNAM** : இந்த கொடிக்காட்டில் இருக்கும் குதிரைகளை அபிவிருத்தி செய்ய இதற்கு முன்னமேயே ஒரு திட்டம் வந்து அதை அரசாங்கம் பரிசீலனை செய்தது. இப்பொழுது அதிகாரிகள் வந்து அதைப் பார்த்துவிட்டு புள்ளிவிவரங்கள் மற்றெல்லாம் எடுத்துக் கொண்டுவந்தார்கள். இப்பொழுது மேலும் அதுபற்றி என்ன நடவடிக்கைகள் எடுக்க அரசாங்கம் உத்தேசித்திருக்கிறது ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : முன்பு பரிசீலனை செய்ததில் பொருளாதார நிலையையொட்டித்தான் இது கைவிடப்பட்டது. அது ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஆனால் பிறகு இந்தப் பிராந்தியத்தை "ஒயில்ட் லைப் சாங்க்சுவரி" யாக்க நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது கால்நடை டைரக்டர் அவர்கள் ஒரு சிறிய திட்டத்தை சமர்ப்பித்திருக்கிறார், இங்கிருக்கிற குதிரைகளை வளர்ப்பதுபற்றி. அதற்குள்ள செலவெல்லாம் 4,500 ரூபாய்தான் ஆகிறது. ஆகவே இதை இப்பொழுது அரசாங்கம் பரிசீலனை செய்துகொண்டிருக்கிறது.

**SRI R. SRINIVASA AYYAR** : Sir, is there any proposal before the Government to start a horse breeding station in this State?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : There is no such proposal now.